

# OTHELLO

# ஒதெல்லோ டெஸ்டிமோனு

## இவர்களுடைய கதை



ஐரோப்பாகண்டத்தில் இத்தாலியா நாட்டிலுள்ள வேனிஸ் நகரத்தில் பிரபாண்டியோ என்னும் தனிகன் ஒருவனிருந்தான். அவன் அந்நாட்டு ஆலோசனைச் சபையிலொருவன். அவனுக்கு டேஸ்டிமோனு என்னும் பெயரையுடைய அழகும், அடக்கமும் உள்ள மகள் ஒருத்தி இருந்தனள். அவளுக்குள்ள அநேக குணுதிசயங்களையும் சம்பத்தையும் பார்த்து, அநேகர் அவளை விவாகம் செய்துகொள்ள விரும்பினூர்கள்; ஆனுல் தன்னுடைய தேசத்திலும் வர்ணத்திலும் உள்ளவர்களில் யாரிடத்திலும் அவளுக்குப் பிரியமுண்டாகவில்லை. அவள், மனிதர்களுடைய முகத்தின் அழகைக் காட்டிலும், அவர்களுடைய இருதயமே மேலானதென்று நினைத்தவள்; ஆகையால் அப்பெருந்தன்மையுள்ள சீமாட்டி, தன் தகப்பன் பிரீதிவைத்து அடிக்கடி வீட்டுக்கு அழைத்துக்கொண்டுவந்த கரியனுன ஓர் துருக்கனிடத்தில் பிரியங்கொண்டு, அவனையே விவாகம் செய்துகொள்வதாய் நிச்சயித்தாள். அப்புதுமையைக் கண்டு எல்லோரும் ஆச்சரியப்படத்தக்கதா யிருந்தாலும் அப்படிச் செய்வதுமாத்திரம் சரியல்ல.

தகுதியற்றவனைத் தனக்கு நாயகனுக ஏற்படுத்திக்கொண்டதைப்பற்றி, டேஸ்டிமோனு விடத்தில் தோஷம் கற்பிக்கச்

சிறிதும் நியாயமில்லை. ஏனென்றால் ஒதெல்லோ கரியனென்னும் குறைவைமாத்திரம் நீக்கிவிடும்பட்சத்தில் அதி உத்தமமான பெண்ணின் மனதையுங் கவரத்தக்க குணங்களையுடையவனா யிருந்தான். அவனோ போர்வீரன்; வெகுதீரன்; துருக்கிநாட்டு ஜனங்களோடு வெகு உக்கிரமான யுத்தங்கள் செய்தவன்; தன் நடத்தையினாலேயே வேனிஸ் இராசாங்கத்தின் சேனாபதி என்னும் பட்டம் பெற்றவன்; வெகு நம்பிக்கையும் மதிப்பும் அடைந்தவன்.

அவன் வெகு தேசங்களைச் சுற்றிப்பார்த்தவன். ஆகையால் அவன் கண்ட புதுமைகளையெல்லாம் தனக்குச் சொல்ல வேண்டுமென்று பெண்கள் வழக்கப்படி டேஸ்டிமோனா கேட்பாள். அவன் அவைகளையெல்லாம் ஆதியோடந்தமாய் நன்றாய் ஞாபகம் செய்து சொல்வான். தனக்கு நேரிட்ட யுத்தங்களையும், முற்றுகைகளையும், சச்சரவுகளையும், பூமியின்மீதும், சமுத்திரத்திலும் தனக்குண்டான அபாயங்களையும், மதில்களை இடித்து உட்புகுந்தபோதும், பீரங்கியின் வாய்க்கு நேராய்ச் சென்றபோதும், பலதடவை மிக்க கஷ்டத்தோடு பிராணனைத் தப்பித்துக்கொண்டதும், தலைகொழுத்த பகையாளிகள் தன்னைச் சிறையிலிட்டு அடிமை வேலைக்கு விற்றதும், அப்படியே சிலகாலமிருந்து அவ்விடத்தை விட்டுத் தப்பித்துக்கொண்டு ஓடியதுமாகிய இக்கதைகளைச் சொல்லுவான். அன்னிய தேசங்களில் தான் ஆச்சரியமாய்ப் பார்த்த பெருங்காடுகளையும், விசித்திரமான குகைகளையும், கல் வெட்டி எடுக்கும் பள்ளங்களையும், பாறைகளையும், மேக மண்டலத்தை அளாவியிருக்கும் பர்வதங்களையும், நாகரீகமற்ற பல ஜாதியாரையும், நரமாமிசம் தின்னும் ஜனங்களையும், தோளின்கீழ்த் தலையுள்ளவர்களாய் ஆபிரிக்காகண்டத்தில் வாசம்செய்யும் ஒருவித மனிதர்களையும் வர்ணித்துச் சொல்லுவான். இந்த யாத்திரைக் கதைகளைக் கேட்பதில், டேஸ்டிமோனா தன் கவனத்தையெல்லாம் செலுத்திக்கொண்டு வந்ததனால், ஏதாவது வீட்டுவேலையின் பொருட்டுக் கூப்பிட்டால் உடனே போய் அதை விரைவில் முடித்து மறுபடியும் வந்து வெகு ஆவலுடன் கேட்பாள். இவ்வாறு கதை சொல்லிய காலங்களில் ஒதெல்லோ தன் கதையை முற்றிலும்

கூறவில்லை. ஒருநாள் அவள் சந்தோஷமாயிருக்கும் சமயம் பார்த்து, சரியாய்ச் சொல்லவேண்டுமென்று அவளே கேட்கும்படி செய்துகொண்டு ஆதியோடந்தமாய்த் தன் கதையைச் சொல்லத் தொடங்கினுன்.

கதை முடிந்தவுடனே அதைச் சொல்வதில் அவனுக்குண்டான சிரமம் நீங்கும்படி அக்கதையை நினைத்துக்கொண்டு, அடிக்கடி பெருமூச்செறிந்தாள். அப்புறம், இது வெகு ஆச்சரியமான சரித்திரம்; கேட்பவர்களுக்கெல்லாம் என்றுமில்லாத பரிதாபத்தை யுண்டுபண்ணுகின்றது என்று உறுத்திச் சிங்காரமாய்ச் சொன்னுள். மறுபடியும் "ஐயோ இதை நான் ஏன் கேட்டேன்? இப்படிப்பட்டவனை யல்லவோ நமக்குக் கணவனுகக் கடவுள் ஏற்படுத்தவேண்டியது" என்று மனதில் எண்ணிக்கொண்டாள். பின்பு அவனைப்பார்த்து உபசார வார்த்தைகளைச் சொல்லி, "உன் சிநேகிதர்களில் யாருக்காவது என்னிடத்தில் பிரியமிருந்தால் இப்படித் தன் கதையை எனக்குச் சொல்லும்படி அவனுக்கு நீ கற்றுக்கொடுப்பாயாகில் அவன் வலையில் நான் தப்பாமல் அகப்பட்டுக்கொள்ளுவேன்" என்றுள். இப்படிப் பட்டும் படாமலும் வெகு சங்கோசத்தோடு, கேட்டவர்கள் சோர்ந்துவிழும்படி, தன் முகத்தில் நாணந்தோன்ற அவள் சொகுசாய்ச் சொன்னதின் தாற்பரியத்தை ஒதெல்லோ அறிந்துகொண்டான். உடனே அவன் தனக்கு அவளிடத்துள்ள காதலை வெளியிட்டு, தன்னை இரகசியமாய் விவாகம் செய்துகொள்ளும்படி அவளுடைய சம்மதியையும் அந்த திவ்வியமான சமயத்திலேயே பெற்றுக்கொண்டான்.

ஒதெல்லோவினுடைய வர்ணத்தையும், சம்பத்தையும் பார்த்தால், அவனை மருமகனுக அங்கீகரிக்க பிரபாண்டியோவுக்கு எவ்வளவும் சம்மதியிராது. அவனே தன் மகளை அவள் இஷ்டப்படி விட்டிருந்தான். ஏனென்றுல் வேனிஸ் நகரத்திலுள்ள பிரபுக்களின் பெண்களுடைய வழக்கப்படி, அவளும் ஆலோசனைச் சபையாரில் ஒருவனையாவது, அல்லது அந்த அந்தஸ்துக்கு வரத்தக்கவனையாவது கணவனுகஏற்படுத்திக்கொள்ளுவாள் என்றெண்ணியிருந்தான். ஆனுல் அவன் எண்ணம் ஈடேறவில்லை. கரியனுகிய துருக்கனிடத்

திலேயே டேஸ்டிமோஞ பிரியங்கொண்டாள். அவனுடைய பராக்கிரமம் முதலிய மேலான குணங்களின்பொருட்டு, அவனுக்குத் தன் அன்பையும் சம்பத்தையும் ஒப்பித்தாள். ஒதெல்லோவினுடைய கரியவர்ணத்தைப் பார்க்கையில், டேஸ்டிமோஞவைத்தவிர மற்றெவருக்கும் அவனிடத்தில் சற்றும் பிரியமுண்டாகாது. அப்படியிருந்தும், பகுத்தறியும் புத்திசாலியாகிய அவளுக்கு, தான் கணவனுக ஏற்படுத்திக்கொண்ட ஒதெல்லோவினிடத்தில் மனம்பற்றிப் பரிபூரண பக்தி உண்டாய்விட்டது. ஆகையால் "ஆ! இந்த வேனிஸ் நகரத்திலுள்ள பிரபுக்களின் பிள்ளைகளில், அநேகர் என்னை விவாகம் செய்துகொள்ளலாமென் றிருந்தார்களே; அவர்களுடைய வெள்ளைத்தோலும், முகக்களையும், என் கணவன் கருமைக்கு இணையாமா?" என்ருள். இரகசியமாய் அவர்களுக்கு விவாகம் நடந்ததை வெகுகாலம் மறைத்து வைக்க முடியுமா? கிழவனுகிய பிரபாண்டியோ சங்கதி தெரிந்துகொண்டு அப்பட்டணத்தின் மகாசபைக்கு முன் சென்று இந்தத் துருக்கனுகிய ஒதெல்லோ என் வீட்டிற்குப் பலமுறை விருந்தாளியாய் வந்து சாப்பிட்டதைச் சற்றும் நினையாமலும், என் சம்மதியைக் கொள்ளாமலும், மந்திரங்களினுலும், சூனியத்தினுலும், ரூபவதியாகிய டேஸ்டிமோஞ தன்னை விவாகம் செய்துகொள்ளும்படி வசியஞ் செய்து கொண்டானென்று பிராது செய்தான்.

இப்படி இருக்கையிற் கோட்டை கொத்தளங்களாற் பலப்பட்டு, வேனிஸ்நகரத்தார் வசத்திலிருந்த ஸைப்பிரஸ் என்னும் தீவைப் பிடிக்கும்பொருட்டு, துருக்கிநாட்டார் பெரிய கப்பற்சேனையைத் தயார்செய்து அனுப்பினதாய்ச் சமாசாரம் வந்தது. அந்த ஸைப்பிரஸ் தீபத்தைத் துருக்கி நாட்டார் பிடித்துக்கொள்ளாமல் காக்கும் வல்லமை உள்ளவர்கள் ஒதெல்லோவைவிட வேருெருவரும் இல்லை. ஆகையால் அந்த ஆபத்தை நீக்கும்பொருட்டு ஒதெல்லோவை அனுப்ப நிச்சயித்து ராஜாங்கத்தார் அவனை ஆலோசனைச் சபைக்குமுன் அழைப்பித்தார்கள். ஒதெல்லோ செய்திருந்த காரியமோ வேனிஸ் நகரத்தின் சட்டப்படி மரண தண்டனை விதிக்கவேண்டிய ஓர் குற்றம். ஆகையால் அவன்

குற்றவாளியாயும், ராஜாங்கத்தார் கொடுக்கவிருந்த பெருத்த உத்தியோகத்தை அடைய வேண்டியவனுயும் சபையார்முன் நின்ருன்.

பிரபாண்டியோ வயது சென்றவனுயும், ஆலோசனைச் சபையில் ஒருவனுயும் இருந்ததினுல், அம்மகா சபையார் அவன் சொன்னதை வெகு பொறுமையோடு கேட்பார்கள். ஆனுல் அவன் அப்பெண்மணியின் தந்தையாதலால் தனக்குள்ள வயிற்றெரிச்சலினுல் வெகு கோபங்கொண்டு, அனுமானங்களையும், அவதூறு வார்த்தைகளையும் காரணங்களாகச் சொல்லித் த்ன் பிராதை ரூபிக்க முயன்ருன். சபையார் ஒதெல்லோவை அழைத்து, உனக்குள்ள ஞாயத்தைச் சொல் என்று விசாரித்தார்கள். அவன் தனக்கும் டேஸ்டிமோனுவுக்கும் நடந்த கதையை மறைக்காமல் சொன்ஞன். அவன் இப்படிக் கபடமற்று, முன்சொன்னபடி, தான் டேஸ்டிமோனுவை வரித்த கதையைத் தாராளமாய்க் கேட்டவர்கள் உண்மையென்று நம்பத்தக்கவாறு பெருந்தன்மையோடு சொன்னதைப் பிரதான நியாயாதிபதி ஸ்தானத்தில் உட்கார்ந்திருந்த அங்கராத்து அதிகாரி கேட்டு, "இப்படி என் மகளுக்கு ஒருவன் கதை சொல்லுவானுகில் அவன் வலையில் அவளும் விழுந்துவிடுவாள்" என்ருர். இதனுல் டேஸ்டிமோனுவுக்குத் தன்னிடத்தில் அன்புண்டாகும்பொருட்டு ஒதெல்லோ செய்த மந்திரங்களும், ஜாலங்களும் பிரீதியினுல் சாதாரணமாய் மனிதர் பேசும் சாதுரியமான வார்த்தைகளைவிட வேறென்றுமில்லையென்றும், அவன் அவளுக்கு வைத்த சூனியமெல்லாம் தன்னிடத்தில் அன்புண்டாகும்பொருட்டுப் பிரியமான கதைகளைச் சொன்னதேதவிர வேறல்லவென்றும் வெளிப்பட்டது. அப்புறம் டேஸ்டிமோனுவினுடைய சாட்சியினுல் ஒதெல்லோ சொன்னது சரியென்று ஸ்தாபிக்கப்பட்டது. அவள் ஞாயஸ்தானத்திற்கு வந்து, அதிகாரியைப் பார்த்துத் தைரியமாய்ச் சொன்னதாவது:—"என் தந்தை என்னைப் பெற்று வளர்த்து, படிப்பு முதலியவற்றைக் கற்றுக்கொடுத்ததனுல் அவருக்கு என் கடமை எவ்வளவோ அவ்வளவும் செய்யச் சித்தமாயிருக்கிறேன். ஆனுல் என் தாய் எப்படி அவள் தகப்பனைக்

காட்டிலும் புருஷனாகிய இவரை மேலாக நினைத்திருந்தாளோ, அப்படியே என் கணவனாகிய ஒதெல்லோவினிடத்தில் எனக்குள்ள மேலான கடமையை இதோ நான் வெளியிட்டுச் சொல்லுகிறேன். அதற்கு இவர் ஆட்சேபம் செய்யாமல் விடை கொடுக்கவேண்டியது.''

ஆலோசனைச் சபையாரில் ஒருவனாகிய அக்கிழவன், இதைக்கேட்டுத் தன் கட்சியைச் சாதிக்க முடியாமல் பல வாறு துக்கப்பட்டுத் துருக்கனை அண்டையில் அழைத்து விதி இல்லையென்று தன் மகளைத் தத்தஞ்செய்தான். பின்பு அவனைப் பார்த்துச் சொன்னதாவது: — ''அப்பா, இப் பெண்ணை உனக்குக் கொடாமலிருக்கக் கூடுமாகில், அவளை உனக்கு தத்தஞ்செய்ய எனக்கு அணுவேனும் இஷ்ட மிராது. ஆனால் இப்பொழுதும் இவளைவிட வேறு மக்க ளில்லாமற் போனதுபற்றி உண்மையாய் சந்தோஷப்படு கிறேன். ஏனென்றால், அப்படி இருப்பார்களாகில், இவள் செய்த காரியத்தைப் பார்த்து நான் வெகு கொடியவனாய், அவர்களாவது என்னைவிட்டுப் போகாமலிருக்கும்படி வேண் டிய ஏற்பாடு செய்து வைத்துக்கொண்டிருப்பேன்.''

ஒதெல்லோ, யுத்தத்தின் கஷ்டங்களை ஆகாரம் நித்திரை முதலியவைகளைப்போல் இயல்பாய் நினைப்பவன். ஆகை யால் இப்படி இந்தச் சங்கடத்தினின்று நீங்கினவுடனே, **ஸைப்பிரஸ்** தீபத்தில் நடக்கும் சண்டைக்குச் சேனாபதி யாய்ப் போகத் தலைப்பட்டான். புதிதாய் விவாகம் செய்து கொண்டவர்கள் அற்ப சுகங்களில் வீணாய்க் காலத்தைப் போக்குவது வழக்கம். ஆயினும் அபாயமுள்ள யுத்தத்திற் குப் போய்க் கனம் பெறுகிறதே மேலான காரியமென்று டேஸ்டிமோனாவும் தன் கணவனோடு சந்தோஷமாய்ப் புறப் பட்டுப் போனாள்.

ஒதெல்லோவும் அவன் மனைவியும் ஸைப்பிரஸ் தீபத்தி லிறங்கினவுடனே துருக்கிநாட்டார் அனுப்பிய கப்பற்சேனை கொடிய காற்று மழையில் அகப்பட்டுச் சிதறிப்போன சமா சாரம் வந்தது. இதனால் பகைவர்கள் உடனே அத்தீபத்தை எதிர்ப்பார்கள் என்னும் பயம் நீங்கிப்போய்விட்டது. இந்த

யுத்தம் தடைப்பட்டபோதிலும், ஒதெல்லோவுக்கு வெகு சங்கடத்தை யுண்டாக்கும் வேறொரு யுத்தம் ஆரம்பித்தது. அதாவது, சில துன்மார்க்கர்கள் தங்களுக்குள்ள வயிற்றெரிச்சலினுல் ஒரு பாவமும் அறியாத பதிவிரதையாகிய டேஸ்டிமோனுவின்மீது இல்லாததும் பொல்லாததும் சொல்லத் தலைப்பட்டார்கள். ஆகையால் இவர்கள் ஒதெல்லோவுக்கு அன்னிய தேசத்துப் பகைவனாயும் துருக்கிநாட்டு துருக்கனாயும் விடக் கொடிய சத்துருக்களாயிருந்தார்கள்.

சேனுபதியாகிய ஒதெல்லோவுக்கு மற்றெல்லோனாவிட வெகு நம்பிக்கையுள்ளவனுய் மைக்கேல் காசியோ என்றொரு சிநேகிதன் இருந்தான். அவன் நல்ல யௌவனமுடையவன்; போர்வீரன்; பிளாரன்ஸ் என்னும் பட்டணத்தான்; சிங்கார புருஷன்; வெகு மரியாதை உள்ளவன். இந்தக் குணங்களெல்லாம் பெண்களுக்கு பிரியமானவையல்லவா? அன்றியும் அவன் அழகன், வாசாலகன். ஒதெல்லோவைப் போல் வயது சென்றபிறகு ரூபமும் யௌவனமுமுள்ள பெண்ணை விவாகம் செய்துகொண்டவர்களின் மனதில், சந்தேகத்தை உண்டுபண்ண என்னென்ன குணங்களிருக்கவேண்டுமோ அவைகளையெல்லாம் உடையவன். ஆனுல் ஒதெல்லோ பெருந்தன்மையுள்ளவன். வீணுய்ச் சந்தேகத்தை மேற்போட்டுக்கொண்டு இழிவான காரியங்களைச் செய்யத் தெரியாதவன். ஆகையால் அவனிடத்திற் களங்கமற்றிருந்தான். டேஸ்டிமோனுவை விவாகம் செய்வதற்குமுன், அவளுக்கும் தனக்கும் ஒருவாறு மத்தியஸ்தமாகக் காசியோவை வைத்துக்கொண்டிருந்தான். அது எப்படியெனில் பெண்களின் மனதைக் கவரும்படி இனிமையாய் வார்த்தை சொல்லுந் திறம் தனக்கில்லை என்று சிந்தித்து, அப்படிப்பட்ட குணங்கள் தன் சிநேகிதனுகிய காசியோவிடத்திலிருப்பதை அறிந்து, "அப்பா, எனக்குப் பதிலாய் நீ போய் டேஸ்டிமோனுவோடு பேசி என்னை விவாகம் செய்துகொள்ளும்படி சரிப்படுத்து" என்று பலமுறை தூதனுப்புவான். இப்படிக் கபடமில்லாமல் வீரனுகிய இத்துருக்கன் செய்த காரியம் அவன் பெருந்தன்மையைக் காட்டுகிறதேயொழியக் குற்றமாகுமா? ஆகையால் குணவதியாகிய பதிவிரதைக்கு அன்

னிய புருஷனிடத்தில் எவ்வளவு பிரீதியும் நம்பிக்கையும் இருக்கலாமோ, அவ்வளவையும் உத்தமியாகிய டேஸ்டி மோனு தன் கணவனுகிய ஒதேல்லோவுக்கு இரண்டாவ தாய்க் காசியோவிடத்தில் வைத்திருந்தாள். இதோர் ஆச் சரியமா? அவ்விருவருக்கும் விவாகமானபிறகும் அவர்களுக் குக் காசியோவிடத்திலிருந்த பிரீதி மாறவில்லே. அவன் அடிக் கடி அவர்கள் வீட்டிற்கு வந்து கபடமில்லாமல் தாராளமாய்ப் பேசுவான். அப்படி பேசத்தெரியாத ஒதேல்லோ அவன் பேசும் வார்த்தைகளேக் கேட்டுச் சந்தோஷப்படுவான். சிரி த்து உல்லாசமாய்ப் பேசத் தெரியாதவர்கள் அப்படிப் பேசு கிறவர்களின் வார்த்தைகளேக் கேட்டுத் தங்கள் மௌனத்தை விட்டுப் பலமுறை சந்தோஷப்படுகிறது வழக்கந்தானே? மே லும் தன் சிநேகிதனுகிய ஒதேல்லோவுக்காகத் தன்னேடு பேசக் காசியோ வந்துகொண்டிருந்த நாளில் எப்படி அவ னேடு பேசிச் சிரிப்பாளோ அப்படியே இப்பொழுதும் டேஸ்டிமோனு செய்துகொண்டுவந்தாள்.

ஒதேல்லோ நம்பிக்கை உள்ளதாயும் சேனுபதியாகிய தன்னண்டையிலேயே இருக்கவேண்டியதாயுமிருந்த உதவித் தலேவனென்னும் மேலான வேலேக்குக் காசியோவைச் சில நாளேக்குமுன் மாற்றி இருந்தான். இப்படிக் காசியோவை மாற்றினதினுல் அயாகோ என்னும் பெயருடைய வேருெரு உத்தியோகஸ்தனுக்கு வெகு பொருமை யுண்டாயிற்று. இந்த அயாகோ, காசியோவைக்காட்டிலும் வெகுகாலம் உத்தியோ கத்திலிருந்தவன். ஆகையால் அவ்வுத்தியோகத்துக்கு அவ னேப்பார்க்கிலும் தனக்கு மேலான பாத்தியதை உண்டென்று அடிக்கடி அவனேப்பற்றி இப்படி இழிவாய்ச் சொல்லுவான். "இந்தக் காசியோ பெண்கள் கூட்டத்திற் சேர்ந்து வம் பளப்பதற்கே தகுந்த பயல்; ஒரு சிறு பெண்ணுக்கு எவ் வளவு யுத்தசாஸ்திரமும் சண்டையிற் சேனேயை அணி வகுக்கும் விதமும் தெரியுமோ அவ்வளவு இவனுக்கும் தெரி யும்" என்று கூறுவான். இப்படியே காசியோவிடத்தில் இருந்த பகையினுல் அந்தக் காசியோவுக்கு அனுகூலமாயி ருந்த ஒதேல்லோவினிடத்திலும் துவேஷம் வைத்தான். அன்றியும் தன் மனேவி எமிலியா என்பவளிடத்தில் துருக்

கனுகிய ஒதேல்லோ தகாத பிரீதிவைத்திருந்தான் என்று அயாகோ மனதில் அநியாயமாய்ச் சந்தேகமுண்டாயிருந்தது. அதனுல் விரோதம் அதிகரித்தது. இப்படி இல்லாததையெல்லாம் உள்ளதாகக்கொண்டு கடுங்கோபமடைந்து, காசியோ, ஒதெல்லோ, டெஸ்டிமோனு ஆகிய இம்மூவனையும் ஒன்ருய்க் கெடுத்துத் தன் பகை தீர்த்துக்கொள்ளும்படி வெகு பயங்கரமான ஒரு யுக்தி செய்தான்.

அயாகோ வெகு கபடமுள்ளவன். மனிதர்களுடைய சுபாவத்தை நன்ருய் அறிந்தவன். அன்றியும் ஒரு மனிதனுக்குத் தன் மனேவியினிடத்திற் சந்தேகம் உண்டாவதினுல் நேரிடும் ரோஷத்தையும், துயரத்தையும்விடப் பொறுக்கக்கூடாத வேறு சித்திரவதை எங்குமில்லை என்பதையும் நன்ருய் அறிந்தவன். ஆகையால் இப்படி எண்ணினுன்:—"ஒதேல்லோவுக்குக் காசியோவிடத்திற் சந்தேகமுண்டானுல் அதுவே நம்முடைய பகையைத் தீர்த்துக்கொள்வதற்குத் திவ்வியமான மார்க்கமாயிருக்கிறது. அப்பொழுது காசியோவாவது, ஒதேல்லோவாவது இறந்துபோவான்; அல்லது அவ்விருவரும் மாண்டால்தான் நமக்கென்ன?"

சேனுபதியும் அவன் மனேவியும், ஸைப்பிரஸ் தீவுக்கு வந்தவுடனே, பகையாளியின் கப்பற்சேனே சிதறிப்போய் விட்டதென்று சமாசாரம் வந்ததல்லவா? அதனுல் அத்தீவிலுள்ளோர் அந்நாளை விசேஷதினமாய்க் கொண்டாடினுர்கள். எங்கேபார்த்தாலும் விருந்தும் வேடிக்கையுமாயிருந்தது. சாராயத்தைத் தண்ணீர்போலச் செலவழித்துக் கிண்ணங்களில் மொண்டு வரிசைவரிசையாய் உட்கார்ந்து, கரியனுகிய ஒதெல்லோவும் அவன் மனேவியாகிய அழகிய டேஸ்டிமோனுவும் யாதொரு விக்கினமுமில்லாமல் பல்லாண்டு பல்லாண்டாய் க்ஷேமமாயிருக்க வேண்டுமென்று கோரிக்கொண்டே குடித்தார்கள்.

அன்றிராத்திரி அங்குள்ள காவற்காரருக்குக் காசியோ எஜமானனுய் இருந்ததனுல் ஒதேல்லோ அவனேப் பார்த்துத் திட்டஞ் செய்ததாவது:—"இச்சைனியத்திலுள்ள போர்ச் சேவகர்கள் தாறுமாருய்க் குடித்துச் சண்டையிட்டால், இத்

தீவிலுள்ள ஜனங்களுக்குப் பயமுண்டாகும். இன்று வந்திறங்கிய சைனியத்திலுள்ளவர்கள் வெகு துஷ்டர்கள் என்று அவர்கள் வெறுத்துக்கொள்ளுவார்கள். அப்படி வெறுக்காமலிருக்கும்படி நீ ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்ள வேண்டியது." அயாகோ இவர்களைக் கெடுக்க நன்றாய் ஆலோசித்துச் செய்துகொண்ட ஏற்பாட்டின்படி அன்றிராத்திரியே வெகு வஞ்சனையான காரியமொன்று செய்தான். அதாவது, சேனாபதியாகிய ஒதெல்லோவினிடத்தில் வெகு பக்தியும், விசுவாசமும் உள்ளவனைப்போல் காசியோவுக்குக் காட்டினான். அவனை ஏமாற்றி முன்பின் பாராமல் தாராளமாய்க் குடிக்கும்படி செய்யத் தலைப்பட்டான். சேனைத் தலைவர்கள் பாராக்கொடுக்கும்பொழுது, இப்படிக் குடிக்கிறது மிகவும் தவறானகாரியம். காசியோ முதலில் கூடாதென்று தடுத்தான். அதைக்கேளாமல் அயாகோ வெகு சாமர்த்தியத்தோடு தன் கொடிய எண்ணத்தை மறைத்துச் சரியானவனைப்போல் சரசமாய் பேசிக்கொண்டுவந்தான்.

அதைக்கேட்டுக் காசியோ மயங்கிவிட்டான். குடியில் ஆசை அதிகரிக்கும்படி அயாகோ பாட்டுகள் பாடிக்கொண்டே சாராயத்தை மொண்டு மொண்டு கொடுத்தான். காசியோ கிண்ணங் கிண்ணமாய் உள்ளே விட்டுக்கொண்டே வந்தான். அன்றியும் டேஸ்டிமோனாவை, மிதமிஞ்சிப் புகழ்ந்தான். அவள் வெகு உத்தமி யென்றும் நெடுநாள் க்ஷேமமாயிருக்கவேண்டுமென்றும் சொல்லி அடிக்கடி மறுபடியும் குடித்தான். இப்படி இவன் வாயில் விட்டுக்கொண்ட சாராயமாகிய சத்துருவின் செய்கையினால் நல்ல ஞானம் நீங்கிப் புத்தி தடுமாறிப் போய்விட்டது. அப்பொழுது அங்கிருந்தவர்களில் ஒருவன் அயாகோவினால் ரகசியமாய் ஏவப்பட்டுக் காசியோவுக்குக் கோபமுண்டாகும்படி சில வார்த்தைகளைச் சொன்னான். உடனே அவனும் இவனும் கத்தியை உருவிக்கொண்டு சண்டை செய்யத் தலைப்பட்டார்கள். இதைக்கண்டு இவர்கள் கோபத்தைத் தடுத்துச் சண்டையை நிறுத்தலாமென்று மோந்தானோ என்னும் கௌரவமுள்ள உத்தியோகஸ்தன் ஒருவன் மத்தியஸ்தனாய் வந்தான். அவனுக்குக் காயம்பட்டது. அப்புறம்

சண்டை பலத்தது. இரண்டு பக்கத்திலும் அநேகர் சேர்ந்து கைகலந்தார்கள். அப்பொழுது அவர்களை உள்ளுக்குள் தூக்கிவிட்டவனுகிய அயாகோ எல்லாருக்குமுன் தானே ஓடிச் சங்கதியை வெளியிட்டான். குடித்த வெறியின்மேல் சச்சரவு செய்துகொண்டிருப்பதை ஏதோ பிரமாதமான கலகம் நேரிட்டதுபோற் காட்டினன். கோட்டை மணியை அடிக்கச் சொன்னன். இப்படி எச்சரிக்கையாய் அடித்த மணியின் ஓசையை ஒதேல்லோ கேட்டுத் திடுக்கிட்டெழுந்து அவசரமாய் உடுப்புகளைப் போட்டுக்கொண்டு சச்சரவு நடக்குமிடத்திற்கு வந்து காரணம் என்னவென்று காசியோவைக் கேட்டான். அப்பொழுது காசியோவுக்குச் சற்றுக் குடிவெறி நீங்கி நல்லறிவுண்டாயிருந்தது. ஆயினும் வெகு வெட்கப்பட்டுப் பதில் சொல்லாமல் இருந்தான். இதைப்பார்த்துக் காசியோவின்மீது தோஷம் சொல்லச் சற்றும் இஷ்டமில்லாதவனு யிருந்தவன்போலவும், கூடாது நீ அவசியம் உண்மையைச் சொல்லவேண்டுமென்று ஒதெல்லோ கேட்க அதன்மேல் விதியில்லை யென்று சொல்லத் தொடங்கினவன்போலவும் அயாகோ வேஷம்போட்டான். தான் செய்த குற்றத்தையெல்லாம் மறைத்துவிட்டான். காசியோ குடித்திருந்ததனுல் அவனுக்கு அயாகோ செய்த குற்றம் ஞாபகமில்லாமற் போய்விட்டது. அயாகோ காசியோவினிடத்தில் விசேஷ தப்பில்லையென்று சொல்லிக்கொண்டே அவன்மீது பிரமாதமான தோஷத்தைக் கற்பித்து நடந்ததையெல்லாம் சொன்னன். ஒதேல்லோ கண்டிப்பான அதிகாரியாகையால், இதைக்கேட்ட காசியோவை ஒத்தாசைத் தலைவன் என்னும் வேலையினின்று நீக்கிவிட்டான்.

இப்படி அயாகோ செய்த முதல் தந்திரம் குறைவின்றி ஈடேறிவிட்டது. அதாவது அயாகோ தன் கொடிய பகையாளியாகிய காசியோவுக்கு உள்ளுக்குள் துரோகம்செய்து உத்தியோகத்தைப் போக்கடித்தான். அன்றியும் அந்த இராத்திரியில் கிரகசாரம் போதாமல், காசியோவுக்கு சம்பவித்த கெடுதியைக் காரணமாக வைத்துக்கொண்டு வேறு சில காரியங்களையும் செய்தான். காசியோ இவ்வாறு தனக்கு நேரிட்ட

சங்கடத்தினுல் புத்திவந்து தன்னுேடு சிநேகிதனைப்போல் மோசவார்த்தைகளைப் பேசும் அயாகோவைப் பார்த்து "அப்பா, நான் வெகு மதிகெட்டவன்; அல்லாமற்போனுல் அப்படி மிருகத்தைப்போல் மெய்மறந்து குடிப்பேனு? நான் வீணுய்க் கெட்டேன். சேனுபதியிடத்தில் போய் மறுபடி உத்தியோகத்தைக் கொடுக்கும்படி கேட்டால் 'போடா குடியா' என்பாரே. என் பாழும் ஜன்மம் என்னத்துக்கு" என்று தன்னைத்தான் இகழ்ந்து வெகு துக்கப்பட்டான். அதற்கு அயாகோ: "அப்பா, இதை ஒரு பிரமாதமாய் நினைக்கலாமா? மனிதன் என்றிருந்தால் எப்பொழுதாவது ஒருகாலத்தில் குடிக்கிறது சுபாவந்தானே. கெட்டுப்போன காரியத்தைக் கூடியமட்டும் செவ்வைப்படுத்தவேண்டியதே இப்பொழுது நம்முடைய கடமை. சேனுபதியின் மனைவி இப்பொழுது சேனுபதியாயிருக்கிருள். அவள் எப்படிச் சொன்னுலும் அப்படிச் செய்ய ஒதெல்லோ சித்தமாயிருக்கிருன். ஆகையால் உன்பொருட்டுத் தன் கணவனிடத்தில் பரிந்து பேசும்படி அவளைக் கேட்டுக்கொள். மேலும் அவள் கபடமற்றவள். ஏதாவது கேட்டால் யாருக்கும் இல்லை யென்று சொல்லாமற் சகாயஞ்செய்யும் சுபாவமுடையவள். அன்றியும் உனக்கு இந்த உபகாரம் செய்வதிற் சற்றேனும் தடையில்லாமல் முயற்சிசெய்து மறுபடியும் சேனுபதிக்குத் தயவுண்டாகும்படி செய்வாள். அப்புறம் உன்னிடத்தில் அவனுக்குள்ள மனஸ்தாபம் நீங்கி முன்னிருந்ததைக்காட்டிலும் விசேஷ பிரீதி உண்டாய்விடும்" என்ருன். பின்வருவதைப் பார்த்தால் இவன் சொன்னது சுத்த மோசமென்று தெரியவரும். அப்படியில்லாமல் அயாகோ களங்கமற்று இந்த வார்த்தைகளைச் சொல்லியிருப்பானுகில் அது காசியோவுக்குத் தகுந்த புத்திதான்.

அயாகோ சொன்னபடி டேஸ்டிமோனு உண்மையாய்ச் சகாயம் செய்ய எளிதிற் சம்மதிக்கும் உத்தமிதான். அவளிடத்திற் காசியோ தன் குறைகளைச் சொல்லிக்கொண்டான். அவள் அதற்கு, "அப்பா, காசியோ, என் எஜமானனிடத்தில் உன்பொருட்டு வேண்டியமட்டும் சொல்லுகிறேன். அவர் என் வார்த்தையைக் கேளாதபட்சத்தில் என் பிராணனை

விட்டுவிடுகிறேன்" என்று வாக்குத்தத்தஞ்செய்தாள். உடனே ஒதேல்லோவினிடத்திற்குப் போய் வெகு சிரத்தையாயும், உருக்கமாயும் காசியோவைக் குறித்துப் பரிந்து பேசினுள். ஒதேல்லோவுக்குக் காசியோவினிடத்திற் தீராத கோபமிருந்தது; ஆயினும் அவள் வார்த்தையைக் கேட்டுத் தடுக்க முடியாமற்போய்விட்டது. ஆகையால் அவளேப்பார்த்து அவன் சொன்னதாவது: — "சற்றுப் பொறு; நான் அப்படியே செய்கிறேன். அவனே பெரிய தப்பிதம் செய்திருக்கிருன். அப்படியிருக்க இவ்வளவு சீக்கிரத்தில் அவனே மன்னிக்கக் கூடாது." அதற்கு அவள், "கூடாது; நான் கேட்கமாட்டேன். இன்றிராத்திரியோ, நாளேக்காலேயிலோ, அல்லவென்ருல் மறுநாட்காலேயிலோ அவன் உத்தியோகத்தை அவனுக்குக் கொடுக்கவேண்டியது" என்று சொன்னுள். மறுபடியும் ஒதேல்லோவைப் பார்த்து: "ஆ, அநியாயமாய்க் காசியோவுக்கு வெகு துக்கமும் அவமானமும் நேரிட்டன. அவன் செய்த தப்புக்கு இவ்வளவு கடினமாய் அவனேத் தண்டிப்பது சரியா?" என்ருள். அதற்கும் ஒதேல்லோ அசையாமலிருப்பதைப் பார்த்து: "என்ன சுவாமி, உம்மை நான் விவாகம் செய்துகொள்ளும்படி பேசிச் சரிப்படுத்த என்னிடத்திற்கு அவன் பலமுறை வந்தான். அப்படி அவன் வந்த காலங்களில் நான் உம்மைப் பலமுறை இகழ்ந்து பேசியிருக்கிறேன். அப்போதெல்லாம் உமக்கு அனுகூலமாய் அவன் பலவாறு புகழ்ந்து பேசுவான். அப்படிப்பட்ட மைக்கேல் காசியோவின்பொருட்டு நான் இவ்வளவு சொல்லவேண்டுமா? இது உங்களே நான் வாயைத்திறந்து கேட்கத்தக்க விஷயமா? என்னிடத்தில் உங்களுக்கு உண்மையாய்ப் பிரீதியிருப்பதைத் தெரிந்துகொள்ளவேண்டுமானுல் வேறு பெருத்த விஷயங்களேப்பற்றிக் கேட்கமாட்டேனு?" என்ருள். இப்படித் தன் மனேவி சொன்னதைக் கேட்டுத் தடுக்க முடியாமல், "நல்லது, அப்படியே மைக்கேல் காசியோ விடத்தில் தயவுவைத்துச் சமயம்பார்த்து உத்தியோகத்தைக் கொடுக்க எனக்குத் தெரியும். நீ அடிக்கடி எனக்கு இப்படிச் சொல்லாமலிருக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்" என்ருன்.

ஒருநாள் டேஸ்டிமோனுவின் அறைக்கு ஒதேல்லோவும் அயாகோவும் தற்செயலாய் வந்தார்கள். அந்தத் தருணத்திற் காசியோ தனக்காக ஒதேல்லோவுக்குச் சகாய வார்த்தை சொல்லவேண்டுமென்று டேஸ்டிமோனுவைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டிருந்து, அவர்கள் வந்தவழிக்கு எதிர்வாசலிற் புறப்பட்டுப் போனுன். இதைக் கபடமே உருவாயிருக்கும் அயாகோ கண்டு தனக்குள் சொல்லிக்கொள்வதைப்போல் மெல்ல "எனக்கு இது சரியாயில்லை" என்றுன். இவன் இப்படிச் சொன்னதை ஒதேல்லோ கவனிக்கவில்லை. அன்றியும் அவன் உடனே தன் மனைவியோடு சற்றுநேரம் உல்லாசமாய்ப் பேசிக்கொண்டிருந்ததனுல் அதை முழுதும் மறந்தான். ஆனுல் பின்பு அவனுக்கு அது ஞாபகத்திற்கு வந்தது. எப்படி என்றுல், டேஸ்டிமோனு அவ்விடத்தைவிட்டு அப்புறம் போனவுடனே அயாகோ, தன் திருப்தியின்பொருட்டுக் கேட்டாற்போல் "ஐயா, நீங்கள் உங்கள் மனைவியாகிய டேஸ்டிமோனுவை விவாகம் செய்துகொள்ள வார்த்தை நடந்துகொண்டிருக்கையில் அது சங்கதி காசியோவுக்குத் தெரியுமா?" என்றுன். அதற்குச் சேனுபதி: "ஆம், அப்போது அவனை டேஸ்டிமோனுவிடம் அடிக்கடி தூதனுப்பியும் இருக்கிறேன்" என்றுன். இதை அயாகோ கேட்டு ஏதோ வெகு கோரமான சங்கதியைப் புதிதாய்த் தெரிந்துகொண்டவன்போல் புருவத்தை நெறித்து, "அப்படியா!" என்று ஊரத்துச் சொன்னுன். இதைக் கேட்டவுடனே அவ்வறைக்குள் வருகையில் அங்கு டெஸ்டிமோனுவோடு காசியோ பேசிக்கொண்டிருந்து போனதைப்பார்த்து, அயாகோ சொன்னது ஒதெல்லோவுக்கு ஞாபகத்தில் வந்தது. "ஓகோ இதெல்லாம் பார்க்கையில் ஏதோ சங்கதி இருக்கிறது" என்றுன். அயாகோ மோசக்காரத் திருட்டுப்பயலாயிருந்தும் ஒதெல்லோ அவன் சொன்ன மோசவார்த்தைகளின் தன்மையை உணராமல், "இவன் நம்மிடத்தில் வெகு அன்பும் நம்பிக்கையும் உள்ளவன். ஆகையால் ஏதோ ஒரு கெடுதியைக் கண்டு இப்படிப் பேசுகிறுன்" என்று நினைத்தான். ஆகையால் அவனைப்பார்த்து "அப்பா, உனக்குத் தெரிந்ததைச் சொல். நீ சொல்வது எவ்வளவு கெட்ட விஷயமாயி

ருந்தாலும் பயப்படாமல் சொல்" என்றான். அதற்கு அயாகோ "ஐயா, இழிவான விஷயங்கள் எங்கேயில்லே. பெருத்த ராஜகிரகங்களிலும் இருக்கின்றன. அப்படியே சில துஷ்ட சமாசாரங்கள் என் புத்தியிற் பட்டிருக்கின்றன. அவற்றை நான் எப்படிச் சொல்லுவேன். செவ்வையாய்ப் பாராத விஷயங்களைப்பற்றி நீங்கள் துயரமடைவது வெகு பரிதாபத்திற்கு இடமாகும். எனக்குத் தெரிந்ததைச் சொல்லுவேனுகில், உங்களுக்கு அதினுல் வீணுய் மனஸ்தாபம் உண்டாகும். அற்பமான சந்தேகங்களின்பொருட்டு ஒருவருக்குள்ள நல்லபேரைக் கெடுக்கலாகாது" என்று இப்படி ஜாடையாயும், சம்பந்தமில்லாமலும் பல வார்த்தைகளைச் சொன்னுன். இதைக் கேட்டவுடனே ஒதெல்லோவுக்கு அடக்கக் கூடாத ஆச்சரியமும் பரபரப்பும் உண்டாய்விட்டன. இதைக்கண்டு அயாகோ, எஜமானன் மனதில் சங்கட முண்டாகக் கூடாதென்று வெகு ஜாக்கிரதையாய் நடப்பவனைப் போல், "ஐயா, அனுமானம் என்னும் பேய் உட்புகாமல் ஜாக்கிர்தையாய்ப் பார்த்துக்கொள்ளுங்கள்" என்றுன். இப்படுபாவி இவ்வாறு அனுமானப்படாமல் இருக்க எச்சரிக்கையாய்ச் சொன்னதினுலேயே கபடமில்லாத ஒதெல்லோ மனதில் வெகு சந்தேக முண்டாய்விட்டது. உடனே ஒதெல்லோ அவனைப்பார்த்து: "அப்பா, என் மனைவி ரூபவதி; பத்துப் பேர் வருவதிலும் போவதிலும் விருந்துகள் செய்வதிலும் பிரியமுள்ளவள். சங்கோசமில்லாமல் பேசும் இயற்கையுடையவள். நன்ருய்ப் பாடவும் விளையாடவும் நர்த்தனம் செய்யவும் தெரிந்தவள். இதெல்லாம் எனக்குத் தெரியும். ஆனுல் நற்குணமுள்ளவர்களிடத்தில் இவை எல்லாம் குற்றமற்ற காரியங்களாகையால் தகுந்த ருஜு இல்லாமல் அவளிடத்திற் தோஷம் நினைக்கமாட்டேன்" என்றுன். ஒதெல்லோ அவசரப்பட்டுத் தன் மனைவியிடத்திற் சந்தேகப்படாததைப்பற்றி அயாகோ வெகு சந்தோஷப்பட்டவன்போல், "ஐயா, அப்படி ருஜு ஒன்றுமில்லே. ஆனுல் காசியோ அண்டையிலிருக்கையில் மாத்திரம் அவள் நடத்தையைக் கவனமாய்ப் பார்த்துக்கொண்டு வாருங்கள். அனுமானப் படவேண்டாம். அன்றியும் அனுமானம் சுத்தமாய் இல்

லாமலு மிருக்கவேண்டாம். ஏனென்ருல் என் தேசத்து ஸ்திரீகளுடைய குணங்கள் உங்களேவிட எனக்கு நன்ருய்த் தெரியும். வெனிஸ் நகரத்திலுள்ள ஸ்திரீகள் கணவர்கள் அறியத்தகாத அநேக வெறியாட்டங்களைக் கடவுள் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே ஆடுவது வழக்கம். உங்களை விவாகம் செய்துகொண்ட விஷயத்தில் டேஸ்டிமோஞ தன் தகப்பனை மோசஞ் செய்தாள். அவளுக்குள்ள சிரத்தையைப் பார்த்துக் கிழவன் பரிதாபப்பட்டுச் சூனியத்தினுல் அவள் புத்தி மயங்கிப்போய்விட்டதென்று நினைக்கும்படி நேரிட்டது" என்று தந்திரமாய் எடுத்துக் காட்டினுன். இப்படித் தன் புத்தியில் நன்ருய்ப் படும்படி அயாகோ சொன்ன நியாயத்தை ஒதெல்லோ கேட்டு மிகவும் கலங்கி, "சரிதான். தந்தையை மோசஞ் செய்தவள் கணவனை மோசம் செய்வதைப்பற்றிக் கேட்பானேன்?" என்று நினைத்தான்.

அயாகோ ஒதெல்லோவைப்பார்த்து, "தங்கள் மனதைக் கலக்கிவிட்டதற்கு என்னை மன்னிக்கவேண்டியது" என்ருன். ஒதெல்லோ அதைக் காதிற் போட்டுக்கொள்ளாமல் அவன் முன்சொன்ன வார்த்தையினுல் உள்ளுக்குள் துயரமுற்று: "அப்பா, உனக்கு இன்னும் என்னென்ன தெரியுமோ அதை எல்லாம் சொல்" என்ருன். அதற்கு அயாகோ ஒதெல்லோவைப் பார்த்து: "ஐயா, டேஸ்டிமோஞ தன்னூரில் தன்னை வந்து கேட்ட தகுதியுள்ள அநேக அழகிய பிரபுக்களையெல்லாம் தள்ளி துருக்கனுகிய உங்களை விவாகம் செய்துகொண்டதைப் பார்த்தால் சுபாவத்திற்கு விரோதமாயிருக்கின்றது. அன்றியும் அவள் பிடித்த பிடியைச் சாதிப்பவள் என்றும் தெரியவருகிறது. மறுபடியும் ஆலோசித்துத் தான் செய்தது தப்பென்று அவள் புத்தியில் படும்பட்சத்தில் நல்ல ரூபமும் அழகிய வெளுத்த முகமுமுள்ள வேனிஸ் நாட்டுப் பிரபுக்களோடு உங்களை ஒத்துப்பார்ப்பது சகஜம் தானே. ஆகையால் காசியோவிடத்தில் மறுபடியும் தயவு வைத்து நடப்பிப்பதைச் சற்று நிறுத்தி, டேஸ்டிமோஞ அவனுக்காக வெகு சிரத்தையோடு பரிந்து பேசுவதைக் கவனமாய்ப் பார்க்கவேண்டியது. அதினுல் அநேக விஷயங்களை அறியலாம். அப்படிச் செய்வதே நலம்" என்று தன் கதையை

முடித்தான். இப்படி இம்மோசக்காரப் பாவி தன் சூதுக ளினுல் முதலில் தனக்குச் சகாயம் செய்யும்படி டேஸ்டி மோனுவைக் கேட்குமாறு காசியோவைத் தூண்டினுன். அச் சிபார்சையே காரணமாய்க்கொண்டு பல வஞ்சனைகளை உற் பத்திசெய்தான். ஒரு பாவமும் அறியாத டேஸ்டிமோனு வின் நல்ல குணங்களை யெல்லாம் அவளைக் கெடுக்கும் விபரீதங்களாகக் காட்டினுன். அவள் உத்தம சுபாவமே அவள் அகப்பட்டுக்கொள்ளும் வலையாகும்படி செய்தான். முடிவில் அயாகோ ஒதெல்லோவைப் பார்த்து: "நன்ருய் ருஜு உண்டாகிறவரையில் உங்கள் மனைவியைத் தோஷ மற்றவர்களாய் நினைக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்" என் ருன். அதற்கு "அப்படியே பொறுமையாயிருக்கிறேன்" என்று ஒதேல்லோ சொன்னுன். இவ்வாறு மோசம்போன ஒதேல்லோவுக்கு அதுமுதல் சந்தோஷமென்பது அணுவே னும் இல்லாமல் போய்விட்டது. அபின் தின்ருலும், மந்திர *கோரத்தின் ரசத்தைக் குடித்தாலும், அல்லது உலகத்தில் தூக்கத்தின்பொருட்டுக் குடிக்கும் திராவகங்களை யெல்லாம் குடித்தாலும் அவனுக்குத் தூக்கம்பிடிப்பது அசாத்தியமாய் விட்டது. தன் உத்தியோகத்தினிடத்தில் வரவர வெறுப்புண் டாய்விட்டது. யுத்தத்திலிருந்த சந்தோஷம் போய்விட்டது. சிலவேளை தன் மனைவி சரியானவளென்றும், சிலவேளை அல்லவென்றும், சிலவேளை அயாகோ சொல்வது சரியென் றும், சிலவேளை அல்லவென்றும் நினைப்பான். அப்புறம், "ஐயோ! இந்தச் சங்கதியை நாமேன் தெரிந்துகொண்டோம்? நமக்குத் தெரியாதமட்டும் அவளுக்குக் காசியோவிடத்துள்ள பிரீதியினுல் நமக்கு ஒரு சங்கடமும் உண்டாகாதே" என்று எண்ணமிடுவான். இப்படிப்பட்ட விபரீத எண்ணங்களினுல் மனமானது பலவாறு கலங்கித் தடுமாறிப்போயிற்று. ஆகை யால் ஒருநாள் திடீரென்று அயாகோவின் கழுத்தைக் கை யினுற் பிடித்து அழுத்திக்கொண்டு, "அடா, டேஸ்டிமோனு வின் குற்றத்தை நீ ருஜுப்படுத்தவேண்டியது. அல்லாமற் போனுல் இந்த க்ஷணமே உன்னைக் கொல்லுவேன்" என்ருன்.

---

* இது மயக்கத்தை யுண்டாக்கும் ஓர் பூண்டு. இதின் ரசம் மலட் டை நீக்கும் என்பார்கள்.

அதற்கு அயாகோ தன் சரியான நடக்கையை ஒதெல்லோ குற்றமாக நினைத்ததைப்பற்றி வெகு கோபங்கொண்டாற் போல் அவனைப்பார்த்து, "இலந்தைப்பழம்போற் குண்டுகுண் டாய்ச் சித்திரம் பதித்த கைக்குட்டை ஒன்று டேஸ்டிமோனு வைத்துக்கொண்டிருந்ததை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா" என்முன். ஒதெல்லோ "ஆம், நான் அப்படிப்பட்ட குட்டை ஒன்று அவளுக்குக் கொடுத்தேன். நான் வெகுமதியாகக் கொடுத்தவைகளில் முதலில் கொடுத்தது அதுதான்" என்முன். அதற்கு அயாகோ: "ஐயா, அதே குட்டையினுல் இன்று காசியோ முகந்துடைத்துக்கொண்டதை நான் பார்த்தேன்" என்முன். அதற்கு ஒதெல்லோ: "நீ, சொல்வது உண்மை யானுல் அவர்கள் உயிரை வதைத்து என் பகை தீர்த்துக் கொள்ளும்வரையில் தூங்கமாட்டேன். உனக்கு உண்மை யாய் நம்மிடத்தில் பிரீதியிருப்பது வாஸ்தவமானுல் மூன்று நாளைக்குள் காசியோவைக் கொன்று சங்கதி தெரியப்படுத்த வேண்டியது. என் மனைவியென்று பெயரிட்டுக்கொண்டிருக் கும் அவ்வழகிய ராட்சஸ முண்டையையோ என்ருல் அவ ளைச் சீக்கிரத்தில் கொல்ல உபாயம் தேடுகிறேன்" என்முன்.

தம் மனைவிகளிடத்தில் சந்தேகங்கொண்டிருப்பவர்களுக் குக் காற்றைப்போன்ற அற்பமாயிருக்கும் விஷயங்களும் வேதவாக்கியங்களைப்போலப் பெரிய பிரமாணங்களாய்விடு கின்றன. தன் மனைவியின் கைக்குட்டையைக் காசியோ வைத்துக்கொண்டிருக்கப் பார்த்ததனுலேயே அவனுக்கு அக்குட்டை எப்படிக் கிடைத்ததென்று சற்றும் விசாரிக் காமலே அவனையும் தன் மனைவியையும் கொல்லப் போது மான காரணம் உண்டாய்விட்டதுபோல ஒதெல்லோ நினைத் தான். அப்படி டேஸ்டிமோனு தன் கைக்குட்டையைக் காசியோவுக்கு வெகுமதியாகக் கொடுத்ததே இல்லை. அப் பதிவிரதை தன் கணவனைத் துரோகம் செய்து அவன் கொடுத்த வெகுமதியைத் துன்மார்க்கமாய் வேருெருவனுக் குக் கொடுப்பாளா? காசியோ, டேஸ்டிமோனு இவர்கள் ஒதெல்லோ விஷயத்தில் எவ்வளவும் அபசாரப்பட்டதில்லை. ஆனுல் சதிசற்பனைகள் செய்யத் தொடங்கினுல் தூங்காமல் இரவும் பகலும் அதே தியானமாய் இருக்கும் கொடும்பாவி

யாகிய அயாகோ சாதுவாயும் சொன்னபடி கேட்பவளாயு மிருந்த தன் மனைவியைப்பார்த்து "டேஸ்டிமோனுவிடத்தி லிருக்கும் கைக்குட்டையைப்போல் ஒரு குட்டை நெய் விக்கவேண்டும். அதை அவளிடத்திலிருந்து எடுத்துக் கொண்டுவா" என்று சொல்லி அதைச் சம்பாதித்துக் கொண்டு, காசியோ நடக்கும் வழியில் போட்டுவைத்தான். அதை அவன் எடுத்துக்கொண்டான். உடனே இந்தச் சங் கதியை ஒதேல்லோவோடு சொல்லி டேஸ்டிமோனுவுக்கும் காசியோவுக்கும் சம்பந்தமுண்டென்று பட்டும் படாமலும் தான் முன் சொல்லியிருந்ததற்கு ருஜுவாகக் காண்பித்தான்.

ஒதேல்லோ தன் மனைவியைப் பார்த்தவுடனே வாஸ் தவமாய்த் தலைநோயிருந்தால் கேட்பதுபோல் தனக்குத் தலை நோயென்றும், தலையை இழுத்துக் கட்ட அவள் குட்டை யைச் சற்றுத் தரவேண்டுமென்றுங் கேட்டான். அப்படி யே ஒரு குட்டையைக் கொண்டுவந்தாள். ஒதெல்லோ: "இது வேண்டாம், நான் கொடுத்த குட்டையைக் கொண்டுவா" என்றான். முன் சொன்னபடி அயாகோ மனைவியாகிய எமி லியா என்பவள் அக்குட்டையைத் திருடிக்கொண்டு போய் விட்டாள். ஆகையால் அது டேஸ்டிமோனுவிடத்தில் இல் லாமற் போய்விட்டது. அதற்கு ஒதேல்லோ: "அக்குட் டை எப்படிப் போய்விட்டது? இது பெருத்த தப்பு. ஜீப்டு நாட்டின் ஸ்திரீ ஒருத்தி என் தாயாருக்கு அக்குட்டையைக் கொடுத்தாள்; அந்த ஸ்திரீ மந்திரவித்தை தெரிந்தவள். மனி தர் நினைப்பதையெல்லாம் அறிந்து சொல்பவள். அவள் என் தாயாரோடு: "அம்மா, இக்குட்டை உன்னிடத்திலிருக்கை யில் உன் கணவன் கண்ணுக்கு வெகு ரூபவதியாயிருப்பாய். அதினால் அவருக்கு உன்னிடத்தில் விசேஷ பிரீதியுண்டா கும். ஆனால் இதை இழந்தாலும் மற்றாருக்காவது கொடுத் துவிட்டாலும் அவருக்கு மனம் மாறிப்போம். அன்றியும் முன் எவ்வளவு பிரீதியிருந்ததோ அவ்வளவு வெறுப்புண் டாய்விடும்" என்றாள். அப்படியே என் தாயார் அதைப் பத்திரமாய் வைத்துக்கொண்டிருந்து இறந்துபோகையில் என் னிடத்தில் ஒப்புவித்து: "அப்பா! உனக்கு விவாகம் ஆகிற பட்சத்தில் உன் மனைவிக்கு இக்குட்டையைக் கொடு" என்று

சொன்னுள். அப்படியே உனக்கு நான் கொடுத்தேன். அதை ஜாக்கிரதையாய் வைத்துக்கொள். உன் கண்ணைப் போல் அதையும் எண்ணிக் காப்பாற்று. இப்படிக் கண்ட படியெல்லாம் போட்டுவிடாதே" என்ருன். இதை டேஸ்டிமோனு கேட்டுத் திகிலடைந்து, "அது அப்படிப்பட்ட குட்டையா!" என்று ஆச்சரியத்தோடு சொன்னுள். அதற்கு ஒதெல்லோ, "ஆம், அது மந்திரிக்கப்பட்ட குட்டை; வெகு மகத்துவமுள்ளது; இவ்வுலகத்தில் இருநூறு வருஷம் ஜீவித்திருந்த மந்திரக்காரி ஒருத்தி தன்மேல் ஒருநாள் என்றுமில்லாத ஆவேசம் வந்து குறி சொல்லிக்கொண்டிருக்கையில் அக்குட்டையை நிருமித்தாள். அதை வெகு பரிசுத்தமும் மகிமையுமுள்ள பட்டுப்பூச்சிகளின் நூலெடுத்து நெய்தாள். கன்னிகழியாத பெண்களின் இருதயத்தை எடுத்துச் செய்யப்பட்ட கருவிஞற் சாயம்போட்டாள்" என்ருன். இப்படி டேஸ்டிமோனு அக்குட்டையின் மகத்துவங்களைக் கேட்டு, அதைப் போக்கடித்துவிட்டதை நன்ருயறிந்து தன் மேல் தன் கணவனுக்குள்ள பிரீதியும் அப்படியே போய்விடுமென்று நடுநடுங்கிப் பயத்தால் பிராணனை விடப்போகிறவளைப்போல் நின்ருள். அப்பொழுது ஒதேல்லோ ஏதோ கொடிய காரியத்தை முன்பின் பாராமல் செய்யப்போகிறவனைப்போற் திடுக்கிட்டு மறுபடியும் அவளைப் பார்த்து: "குட்டை எங்கே?" என்ருன். அதைக் கொண்டுவந்து கொடுக்க முடியாமற்போனதால் டேஸ்டிமோனு தன் கணவன் கவனத்தைத் திருப்பும்பொருட்டுக் குளிர்ந்த முகத்தோடு அவனைப் பார்த்து: "ஆ, ஆ, தெரிந்துகொண்டேன், மைக்கேல் காசியோவைப்பற்றி நான் சொல்லிக்கொண்டு வந்ததையெல்லாம் தட்டிவிட இந்தக் குட்டையின் சங்கதியைத் தூக்கிக்கொண்டீரோ?" என்று சற்றுப் பரிகாசமாய்ச் சொன்னுள். அயாகோ ஒதெல்லோவோடு சொல்லிவைத்திருந்தபடியே காசியோவைப் பலவாறு புகழ்ந்தாள். இதை ஒதேல்லோ கேட்டுத் தீராக்கோபத்திற்கு வசப்பட்டு வெறியன்போல் அவ்வறையினின்று வெளியே ஓடினுன். அதை டேஸ்டிமோனு கண்டு: "ஓகோ! எஜமானனுக்கு நம்மிடத்

தில் ஏதோ சந்தேக முண்டாய்விட்டாற்போ லிருக்கிறதே" என்று வெகு சங்கடத்தோடு எண்ணமிடத் தலைப்பட்டாள்.

தன்னிடத்தில் சந்தேக முண்டாகும்படி தான் செய்த காரியம் இன்னதென்று அவளுக்குத் தெரியாது. ஆகையால், "ஐயோ! வெகு உதாரகுணசீலனுகிய நம்முடைய கணவன்மேல் வீணுய்த் தோஷம் நினைத்தோமே; இப்படி அவர் மனதைக் கலக்கி அவர் இனிமையான குணத்தை மாற்றும்படி வேனிஸ் நகரத்திலிருந்து அவருக்குப் பிரதிகூலமான சமாசாரம் ஏதாவது வந்ததோ? அல்லது ராஜாங்கத்தில் ஏதாவது சங்கடங்கள் உண்டாயினவோ?" என்று நினைத்தாள். மறுபடியும் "விவாகமான நாளில் எவ்வளவு பிரியமாய் நடக்கிருர்களோ அப்படியே என்றும் இருக்க மனிதர்களென்ன தேவதைகளா?" என்று சொன்னுள். அப்படிப் பிரியமற்றவனுய்த் தன் கணவனை நினைத்ததைப்பற்றி மறுபடியும் தன்னைத்தானே நொந்துகொண்டாள்.

மறுபடியும் ஒதெல்லோவும் டெஸ்டிமோனுவும் சந்தித்தார்கள். அப்பொழுது அவன் அவளைப் பார்த்து இன்னுனென்று சொல்லாமலே தன்னைத் துரோகம் செய்து வேருெருவன்மேல் ஆசைப்பட்டதாக வெளிப்படையாய்ச் சொல்லி அழுதான். அதற்கு டெஸ்டிமோனு: "ஐயோ! என்ன கெட்டகாலம் வந்துவிட்டது? நீங்களேன் அழுகிறீர்கள்?" என்ருள். அதற்கு ஒதெல்லோ: "வறுமை, பிணி, அவமானம் முதலிய கஷ்டங்களையெல்லாம் அனுபவிப்பேன்; ஆனுல் நீ செய்த துரோகத்தினுல்மாத்திரம் என் மனம் பிளந்துபோய்விட்டது. அடி பதரே! பாதகி! உன்னிடத்தில் கண்குளிரப் பார்க்கும்படியான அழகும், காதுக்கினிமையாய்க் கேட்கத்தக்க பேச்சும் இருக்கின்றன. ஏன் பிறந்தாய்?" என்று துக்கித்தான். இவ்வாறு சொல்லி ஒதெல்லோ போனவுடனே ஒரு பாவமுமறியாத அவ்வுத்தமி தன் பிரபுவானவர் தன்மேல் அநியாயமாய்ச் சந்தேகமுற்றதைப் பற்றி வெகு ஆச்சரியப்பட்டுக்கொண் டிருக்கையில் ஏக்கத்தினுல் கண் ணுறக்க முண்டாயிற்று. அப்பொழுது வேலைக்காரியைப் பார்த்துத் தன் விவாக காலத்தில் கட்டிலின்மீது

விரித்த துப்பட்டிகளை மேலே விரித்துப் படுக்கை போடும்படி திட்டஞ்செய்தாள். "குழந்தைகளுக்கு எதுவும் நன்மையிலேயே கொஞ்சம் கொஞ்சமாய்க் கற்பிப்பது வழக்கமாயிற்றே; அப்படியே நங்கணவன் நம்மைக் குழந்தைபோல் நினைத்துப் பட்டும் படாமலும் புத்தி சொன்னாற்போலிருக்கிறது. நமக்கு ஒருவர் புத்தி சொல்லும்போது வாஸ்தவமாய் நாம் குழந்தைகள்தாமே" என்றாள். இவ்வுத்தமி மனம் நொந்து சொன்னதெல்லாம் இவ்வளவுதான். தன் கணவனும் உள்ளே வருவான் என்று நினைத்து உடனே டேஸ்டிமோனா படுக்கைக்குப் போனாள். மனம் கலங்கி அலண்டிருந்ததனால் சடிதியில் உறங்கினாள். அப்போது ஒதெல்லோ தன் மனைவியைக் கொல்லவேண்டுமென்னும் கொடிய எண்ணத்தோடு அவ்வறைக்குள் வந்தான். ஆனால் அவள் தூங்குவதைக் கண்டு, "உதிரம் சிந்தும்படி இவளை நான் எப்படிக் கொல்வேன்? அன்றியும் படிகக் கல்லினும் மேலான வெண்மையுள்ள இவள் மேனியின் தோலையேனும் கீற எனக்கு மனம் துணியுமா? ஆயினும் இவளைக் கொல்வதே சரி; கொல்லாமல் விட்டால் என்னை மோசம் செய்ததைப்போல் அநேகரை நடுத்தெருவில் விடுவாள்" என்று நினைத்து, "இனிமேல் இவளைப் பார்க்க முடியாதாகையால் கடைசியாய் இப்போது முத்தமிடுவேன்" என்று அவளை முத்தமிட்டு, "ஆ, இம்முத்தம் எவ்வளவு இனிமையாய் இருக்கின்றது? மறுபடியும் அவசியம் முத்தமிடுவேன்" என்று அப்படியே செய்தான். சற்றுக் கண்ணீர் விட்டு அழுது, "ஐயோ! நான் எள்ளளவும் இரக்கமற்ற பாவியாயிருக்கையில், இக்கண்ணீரினாற் பயன் என்ன?" என்றான். முத்தமிட்ட சந்தடியினால் டேஸ்டிமோனா விழித்துக்கொண்டு, ஒதெல்லோவைப் பார்க்கையில், அவன் தன் கீழுதட்டைக் கடித்துக் கண்ணைச் சுழற்றிக்கொண்டிருந்தான். ஏதோ ஒரு விபரீதத்தாலன்றி அவன் அப்படியிருப்பதில்லை என்பது டேஸ்டிமோனாவுக்கு நன்றாய்த் தெரியும். உடனே அவன் அவளைப்பார்த்து: "இதோ உன்னைக் கொல்லப்போகிறேன். என்னால் அழிக்க முடியாத உன் ஆத்துமா கடைத்தேறும்படி கடவுளைத் தியானம் செய்துகொள்" என்றான். இவ்வாறு அவன் வசப்பட்டுத் தத்தளித்துக்கொண்

டிருந்த அவ்வுத்தமி தன் தப்பிதம் இன்னதென்று கருணை கூர்ந்து சொல்லும்படி கேட்டுக்கொண்டாள். அதற்கு அவன் காசியோவின் பெயரைச் சொல்லி, "அவனுக்கு நீ கைக் குட்டை கொடுத்ததை நினைத்துக்கொள்" என, அதற்கு அவள்: "நான் ஒரு பாவமும் அறியேனே" என்று தன்னி டத்தில் தப்பில்லாததை ரூபிக்க முயன்று பல நியாயங்களைச் சொல்லிக்கொண்டிருக்கையிலேயே அவள் வார்த்தையைக் கேளாமல் திடீரென்று படுக்கையிலிருந்த துப்பட்டிமுதலிய துணிகளை அவள்மேற் போட்டு மூச்சுத்திணறிப் போகும் படி அழுத்திக் கொன்முன். அப்பொழுது அயாகோ தன் தயவுக்குக் காத்துக்கொண்டிருந்தவர்களில் ஒருவனை ஏவி காசியோவைக் கொல்லும்படி அனுப்பியிருந்தான். அவன் காசியோவைக் கொல்லாமல் இலகுவாய்க் காயப்படுத்தி னதை அயாகோ கண்டு, அவன் இருந்தால் தன்னுடைய மோசத்தை வெளிப்படுத்துவான் என்று நினைத்து உடனே அவனைக் கொன்முன். இப்படி இறந்தவனுடைய சட்டைப் பையைச் சோதிக்கையிற் சில கடிதங்கள் அகப்பட்டன. அவற்ருல் அயாகோவின் மோசங்களும், காசியோவின் குற்றமற்ற நடக்கையும் சந்தேகமற வெளிப்பட்டன. உட னே காசியோ காயத்தோடு ரத்தம் பெருகிக்கொண்டி ருக்க ஓடிவந்து, "ஐயா, நான் சொல்வதைப்பற்றி என்னை மன்னிக்கவேண்டியது. தாங்கள் அயாகோவைக்கொண்டு என்னைக் கொல்விக்கும்படியான தப்பு என்ன செய்தேன்?" என்று ஒதெல்லோவைக் கேட்டான். அந்தத் தருணம் அவன் தன் மனைவியைக் கொலைசெய்த சமயத்திற்குச் சரியா யிருந்தது.

இதைக்கேட்டமாத்திரத்தில் ஒதேல்லோ இடிவிழுந்தாற் போல் ஏங்கித் தடுமாறினன். வெகு உத்தமியாகிய தன் மனைவி ஒருபோதும் தனக்குத் துரோகம் செய்யாமல் நம்பிக்கையோடிருந்ததையும், தான் அவளை அநியாயமாய்க் கொலை செய்ததையும் அறிந்துகொண்டான். அதனுலுண் டான கடுந்துயரத்தைப் பொறுக்க முடியாமல் கைவாள் உருவி அதின்மேல் பாய்ந்து உடனே அநியாயமாய்க் கொலை செய்யப்பட்ட தன் மனைவியின்மீது விழுந்திறந்தான். ஒதெல்

லோ வெகு யோக்கியனென்று பேர்போனவன். சுபாவத்தில் வெகு பெருந்தன்மையுள்ளவன். அதனால் தன் மனைவியினிடத்தில் சற்றும் சந்தேகமில்லாதவன். படுபாவியாகிய அயாகோ, மோசத்தினால் வேண்டியமட்டும் துர்ப்போதனை செய்து அவன் மனதைக் கலக்கிவிட்டான். அதற்குமுன் தன் பிரியமான மனைவியிடத்தில் பஞ்சபுலன்களையும் வைத்திருந்தவன். ஆகையால் அப்படிப்பட்டவன் முன்பின் பாராமல் அவசரப்பட்டுச் செய்த காரியங்களை அண்டையிலிருந்தவர்கள் பார்த்து வெகு ஆச்சரியமும் திகிலுமடைந்து நடுங்கிப்போனார்கள். ஒதெல்லோ மனைவியிடத்தில் தன் பிரீதியெல்லாம் வைத்திருந்தபோதிலும் நன்றாய் ஆலோசிக்குங் குணமில்லாதவன். மேலும் அற்ப துக்கத்துக்கெல்லாம் அழாத தீரனாயினும், அரேபியநாட்டின் விருட்சங்கள் தாரை தாரையாய் மெழுகைத் தள்ளுவதுபோல வேகமாய் கண்ணீர்விட்டு அழுது இறந்தான். இறந்தபின் அவன் நற்குணங்களையும் பராக்கிரமமான காரியங்களையும் மறக்காமல் கொண்டாடினார்கள். அவனுக்குப் பதிலாய் அச்சேனைத் தலைமை வேலைக்கு வந்தவன், அயாகோவைச் சட்டப்படி வெகு சித்திரவதையோடு சிரச்சேதம் செய்வித்தான். மகா பிரதாப சேனாபதியாகிய ஒதெல்லோ இறந்தான் என்னும் விசனகரமான சங்கதியை வேனிஸ் ராஜாங்கத்தாருக்குத் தெரியப்படுத்தினான். ஆகையால் முன்பின் யோசிக்காமல் அநியாயமாய் ஸ்திரீ ஜனங்களிடத்தில் தோஷங் கற்பித்தல் முதலிய கொடிய பாதகங்களில் நின்றும் நீங்கி மாந்தர் என்றைக்கும் குறைவின்றி வாழ்வாராக.



S. P. C. K. Press, Vepery, Madras—1908.